11th August 1960]

(ஆ) இதனுல் காடுகள் அழிக்கப்படுகின்றன என்பது உண்மையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A paper[a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : மேஜைமீது வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையில், ஆண்டுக்கு ஆண்டு ஏலம் விடுவதால் சர்க்காருக்கு அதிக வருமானம் வருகிறபடியால், அப்படி ஏலம் விடப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல், ஆண்டுக்கு ஆண்டு ஏலம் விடுவதால் ஒரு வருஷ வளர்ச்சியடைந்த பிஞ்சு மரங்களை, பிற கூப்புகளுக்கும் சென்று வெட்டிவிடுகிறுர்கள். அதனுல், மூங்கில் காடுகள் அழிந்துகொண்டுவருவதால், மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை ஏலம் விடுகிற முறையை மறுபடியும் சர்க்கார் கொண்டு வரமுடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதெல்லாம் அனுபவத்திலே பார்த்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறுர்கள். இதிலே வருமானம் அதிகம் வருவது மட்டுமல்ல ; மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை ஏலத்திற்கு விட்டால், பெரிய கண்டிராக்டர்கள்தான் பணம் அதிகம் கட்டி, ஏலம் எடுக்க முடிகிறது. ஒவ்வொரு வருஷமும் ஏலத்திற்கு விட்டால் சாதாரண சிறிய கண்டிராக்டர்களும் ஏலம் எடுக்க முடிகிறது. இந்த இரண்டு காரணங்களுக்காகத்தான் அம்மாதிரி செய்யப்படுகிறது.

SRI S. M. ANNAMALAI : வருஷத்திற்கு ஒரு முறை ஏலம் விடுவதினுல் அவர்கள் போட்டா போட்டியில் அதிகமான தொகைக்கு ஏலத்திற்கு எடுத்துவிடுகிறுர்கள். நஷ்டம் ஏற்படுகிறது. அதனுல், பிற கூப்புகளில் சென்று பிஞ்சு மூங்கில்களை வெட்டுகிறுர்கள். பிஞ்சு மூங்கில்கள் வெட்டப்படாமல் அவைகளைப் பாதுகாப்பதற்குச் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மற்ற கூப்புகளில் சென்று எடுக்காமலிருக்க அரசாங்கம் கூடுமானவரையில் என்ன நடவடிக்கை எடுக்கவேண்டுமோ அதை எடுத்துக்கொள்ளும்.

*Purchase of 'Dead Stock' by the District Agricultural Officers*

*99 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஜில்லா விவசாய இலாகா அதிகாரிகளின் வரம்புக்குட்பட்டு "Dead Stock" சாமான்கள் வாங்குவதானுல், எவ்வளவு வரை வாங்கலாம் ?

(ஆ) இது எப்போது எந்த ஆண்டில் போடப்பட்ட அதிகாரம் ?

---

[a] Printed as appendix on page 470 infra.

[11th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) The District Agricultural Officers are empowered to purchase dead stock articles made in India up to a limit of Rs. 300 for experimental cultivation, demonstration and propaganda purposes.

(b) These powers were delegated for two years in August 1958 and extended for another one year in June 1960.

SRI V. K. KOTHANDARAMAN: பல ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்படுத்தப்பட்ட ஒரு வரம்புக்கு உட்பட்டிருக்கும் காரணத்தினால், இப்பொழுது விலைவாசி உயர்ந்திருக்கும் அளவுக்கு, அதை அதிகப்படுத்தக்கூடிய உத்தேசம் ஏதாவது உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதை உடனே அதிகப்படுத்துவதற்கு அவ்வளவு அவசியம் இல்லை.

*Women porters*

* 100 Q.—SRI P. G. MANICKAM: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் ரயில் பிரயாணிகள் பெட்டி, படுக்கை சாமான்களை தூக்கிச் செல்ல பெண் போர்ட்டர்களுக்கு லைசென்ஸுகள் வழங்குவதுபற்றி மத்திய கவர்ன்மெண்டு நம் மாகாண சர்க்காரை கலந்தாலோசித்தார்களா?

(ஆ) அப்படியானால் பெண் போர்ட்டர்களுக்கு லைசென்ஸ் கொடுப்பதுபற்றி எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகள் யாவை?

THE HON. SRI V. RAMAIAH: (a) No, Sir.

(b) Does not arise.

SRI P. G. MANICKAM: மற்ற ராஜ்யங்களில் பெண் போர்ட்டர்கள் நியமிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. ஏன் நமது ராஜ்யத்திலும் அவ்வாறு பெண் போர்ட்டர்களை நியமிக்கக் கூடாது? தனித்துப் பிரயாணம் செய்யும் பெண்களுடைய சாமான்களை எடுத்துச் செல்ல பெண் போர்ட்டர்கள் உதவியாக இருப்பார்கள் அல்லவா? சர்க்கார் இந்த யோசனையைப்பற்றிக் கவனிப்பார்களா?

THE HON. SRI V. RAMAIAH: மற்ற ராஜ்யங்களில் இருக்கும் நிலைமை எனக்குத் தெரியாது. ஆனால், நமது அரசாங்கத்தைப் பொறுத்தவரையில், இதுபோன்ற சிபார்சுகள் ஒன்றும் மத்திய அரசாங்கத்திற்குச் செய்யவில்லை.

SRI V. SANKARAN: பெண் போர்ட்டர்களுக்கு லைசென்ஸ் கொடுப்பதினால் ஆண் போர்ட்டர்களுக்கு வேலை கிடைக்காது என்ற ஆபத்தை உணர்ந்து, அம்மாதிரி யோசனை ஏதாவது வந்தால், அதை அரசாங்கம் ஏற்றுக்கொள்வதில்லை என்று தீர்மானிக்குமா?

MR. SPEAKER: It is only a suggestion.